ராஜ்யங்களில் எவ்வளவு கொடுக்க முடியும், விலைவாசி எவ்வளவு, மிச்சம் எவ்வளவு என்று ராஜ்ய அரசாங்கம் தெரிவிக்க வேண்டும். அந்த வகையில்தான் ஏற்றுமதி அனுமதிக்கப்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : இப்படி மிளகாய் வற்றலை அதிகமாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யாமல் இருப்போமானால் நமது ராஜ்யத்தில் இவற்றின் விலை சற்று இறங்குவதற்கு அனுகூலமாக இருக்காதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத்தான் நான் விடை அளித்தபோது பதில் சொன்னேன்.

*Temple servants (demands)*

* 1101 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் ஜில்லா ஹிந்து தேவாலய சிப்பந்திகள் சங்கம் 1960-ம் வருஷம் ஜூலை மீ 5-ம் தேதி அரசாங்கத்திற்கு அனுப்பிய அச்சிட்ட விளம்பரத்தில் உள்ள 15-வது தீர்மானத்தின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

(இ) அக்கோரிக்கையில் ஏதாவது அமுலுக்கு வருமா ? எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) The Government have not received any such representation.

(இ) Does not arise.

SRI N. K. PALANISAMI : Sir, may I know whether the Government have been receiving repeated representations from the temple workers of not only the Tanjore temple but also the Madurai Meenakshi temple and other temples? May I also know whether it is not a fact that the Hon. Minister had promised to increase their emoluments at the time when the Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill was discussed here? If so, have the Government directed the trustees and executive officers of these temples to take early steps to increase the emoluments of the employees working in their respective temples?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government cannot give any such direction. But, I may inform the hon. Member that the trustees of these temples have been looking into the matter and they have been revising the emoluments of the employees of the temples. Further, I may tell the hon. Member and others that the Madras State Temple Officers (Out-door) Employees Association has also been there and it has been recognized by the Endowments Board. All servants of the temples may become members of the Association and they may make representations, if any, through that association.

27th March 1961]

**SRI A. VEDARATHNAM :** இப்போது ஆலய நிர்வாகங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டதிலிருந்து ஆலயங்களில் வேலை செய்கிற சிப்பந்திகள் அனைவருக்கும் பே கமிஷன் ரிபோர்ட் படி பே ஸ்கேல் நிர்ணயிக்கப்படுமா ? இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா வகுப்பினரும் சிப்பந்திகளாக நியமிக்கப்படுவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** ஆலய நிர்வாகத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவில்லை. அந்த அந்த ஆலய தர்ம கர்த்தாக்கள்தான் நிர்வகித்து வருகிறார்கள். ஆலய நிர்வாகத்தை அவ்வப்போது இலாகா மேற்பார்வை பார்த்து வருகிறது. அவ்வளவுதான். சில உத்தியோகஸ்தர்கள்தான் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாகக் கருதப்படுகிறார்கள். பே கமிஷன் இவர்களுடைய சம்பள விகிதம் பற்றி சிபார்சு செய்திருந்தால் அது அமுல் செய்யப்படும். மற்றப்படி உத்தியோகஸ்தர்கள் நியமனம் சம்பந்தப்பட்ட வரையில்—மற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர்களை எவ்வாறு நியமனம் செய்கிறோமோ அவ்வாறேதான் நியமனம் செய்து வருகிறோம்.

*Agricultural Labour Enquiry Committee (Report)*

* 1103 *Q.*—**SRI S. M. ANNAMALAI :** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்காரால் அமைக்கப்பட்ட இரண்டாவது விவசாயத் தொழிலாளர் விசாரணைக் கமிட்டியின் அறிக்கை கிடைத்ததா ?

(இ) அப்படியாயின் அதன் விவரமென்ன ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** (*a*) Yes, Sir.

(*b*) Three copies of the summary of the report and its main findings have been placed in the Legislature Library for the use of the Members. The report is under examination.

**SRI S. M. ANNAMALAI :** இந்த விவசாயத் தொழிலாளர்களுடைய பர் காபிடா வருமானம் 1950-51-ல் இருந்ததைவிட இப்போது மிகவும் குறைந்திருக்கிறது என்பது உண்மையா, இல்லையா ? இப்படிக் குறைந்து போனதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் அங்கத்தினர் பொது விவாதத்தின்போதே இதைப்பற்றிச் சொன்னார். உடனே அதற்காகத்தான் இதைப் பற்றி ரிசர்ச் செய்து பார்த்தேன். முதல் என்க்குவயரியில் இருந்ததைவிட இரண்டாவது என்க்குவயரியில் குறைந்திருப்பதற்குக் காரணம் முதல் தடவை எவ்வாறு புள்ளிவிவரங்களைச் சேகரித்தார்களோ அதேபோல இரண்டாவது முறை சேகரிக்கவில்லை. அந்த ஒரே அடிப்படையில் சேகரித்திருந்தால்தான் இரண்டு புள்ளி விவரங்களையும் ஒப்பிட்டுப் பேச முடியும். ஒரே அளவுகோலாக அது இருந்தால் தான் ஒப்பிடுவது சரியாக இருக்கும். அப்படி இல்லை. ஆனால்